# பஞ்சதந்திரம்

## சுகிர்ல்லாபம்

### தலைமைக்கதை

மேரி யரசி மாதர் கலாசாலைத் தமிழ்ப் பண்டிதரும்
'நல்லாசிரியன்' பத்திராதிபரும் ஆகிய
கா. நமச்சிவாய முதலியார்

பதித்தது



சென்னை :
ஸி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்
1922

 [விலை 3 அணா

# முன்னுரை:

பஞ்சதந்திரக் கதை மிகவும் பழமையானது. இதை வித்துவான் தாண்டவராயமுதலியார் மகாராட்டிர பாஷையினின்றுந் தமிழில் மொழிபெயர்த்தனர். இது பாடசாலை மாணுக்கர்களுக்குப் பெரிதும் பயன்படுவதாக இருத்தல் கண்டு பலர் இதனைப் பல பதிப்புக்கள் வெளியிட்டமையின் பதிப்புத்தோறும் பலவாறு மாறுதலடைந்துவிட்டது. இதனை, முதற் பதிப்புக்கு முற்றும் ஒத்திருக்கும்படி, **அநவரதவிநாயகம் பிள்ளையவர்கள்** செப்பனிட்டு, ஒரு பதிப்பு வெளியிட்டு, சொற்பொருள் விளங்குமாறு அருஞ் சொற் குறிப்புக்களையும் அனுபந்தமாக அமைத்திருக்கின்றனர்.

பஞ்சதந்திரக்கதை இடையிடையே பல கிளைக்கதைகளைக்கொண்டு நீண்டு செல்லுதலின் மாணுக்கர் அதைப் படிக்கையில் முதற் கதையைத் தொடர்ந்து உணரப் பெரிதும் இடர்ப்படுகின்றனர். அதனால், அக் கிளைக்கதைகளை நீக்கித் தலைமைக் கதையைமட்டும் தனித்தனியாக வெளியிட எண்ணி, கதைத் தொடர்ச்சிக்காக ஆங்காங்கே சில மாற்றங்கள் செய்திருக்கின்றேன்; வாக்கியங்களையும் பெரும்பாலும் தனிவாக்கியங்களாக மாற்றி யிருக்கின்றேன். சிறுவர்கள் இதனை முன்பு படித்து உணர்ந்தால், பின்பு கிளைக்கதைகளோடு கூடியுள்ள பெரிய கதையை வாசித்துணர்வது அவர்கட்கு எளிமையாக இருக்கும். இத் தலைமைக் கதையை ஒத்திருக்கும்படி பஞ்சதந்திரப் பாடலையும், இன்றியமையாத இடங்களிற் சிறிது மாற்றி, ஈற்றில் சேர்த்திருக்கின்றேன். வசனபாடம் நன்குயத் தெரிந்தால், அதை யொட்டிய செய்யுட்பாடம் செவ்வையாக விளங்கிவிடுமன்றே? இச் செய்யுள்நடை வசனநடையைப் பெரிதும் ஒத்தே இயன்றிருக்கின்றது.

வசன பாடத்திலும், செய்யுட் பாடத்திலும் வரும் அரிய சொற்களை அகராதியாக்கி, அவற்றிற்குப் பொருள் எழுதி, இப் புத்தகத்தின் முன்னும் பின்னும் முறையே சேர்த்திருக்கின்றேன்.

**கா. நமச்சிவாயன்.**

## வசன பாடத்தில் வரும்

# அருஞ்சொல் அகராதி

அஃது - அது.
அசாத்தியம் - செய்து முடிக்கக் கூடாதது.
அத்தியந்தம் - அதிகம்.
அநாதரவு - அலக்ஷியம்.
ஆதித்தியம் - உபசாரம்.
ஆலோசித்தல் - யோசித்தல்.
இரணியகன் - பொன்னையுடையவன்.
இறைவன் - அரசன்.
உபசாரம்-மரியாதைவார்த்தை
உற்சாகம் - முயற்சி.
ஒன்றும் - பொருந்தும்.
கதாப்பிரசங்கம் - கதைகளைப் பிரசங்கித்தல்.
கபோத ராஜன் - புறு அரசு.
கப்பரை - மண்ணாற் செய்த உண்கலம்.
கர்ச்சனை - முழக்கம்.
கர்ப்பூர கௌரம் - கர்ப்பூரம் போல் வெண்மையானது.
கழி - கோல்.
களங்கம் - குற்றம், மாசு.
கிருகச் சித்திரம் - வீட்டிலுள்ள ஊழல்.
கிலேசம் - துக்கம்.
குரோதம் - கோபம்.
கூர்மம் - ஆமை.
சகல குண சம்பன்னன் - எல்லா நற்குணங்களும் நிறைந்தவன்.
சச்சரவு - சண்டை.
சஞ்சலம் - துன்பம்.
சஞ்சாரம் - வாசம்.
சத்துரு - விரோதி.
சந்நியாசி - துறவி.
சமர்த்தன் - கெட்டிக்காரன்.
சமானஸ்தர் - ஒப்பானவர்.
சம்பகாவதி - சம்பக மரங்களையுடையது.
சம்பாஷித்தல் - பேசுதல்.
சம்மானம் - உபசாரம்.
சற்சனர் - நல்லவர்.
சாதனம் - கருவி.
சாது - சாந்தகுண முள்ளவன், பெரியோன்.
சாமர்த்தியம் - வன்மை.
சித்திரக்கிரீவன் - பலநிறமுள்ள கழுத்தை உடையவன்.
சித்திராங்கன் - அழகிய உருவ முள்ளவன்.
சிந்தை - மனம்.

சுகிர்ல்லாபம் - நண்பரை அடையப் பெறுதல்; அதனால் இதற்கு மித்திரலாபம் என்றும் பெயர்; இது தமிழில் நட்புப்பேறு எனப்படும்.
சுபாவம் - இயற்கை.
சுரம் - காய்ச்சல்.
சுற்றங்கள் - பந்துக்கள்.
சூடாகர்ணன் - காதில் மயிருள்ளவன்.
சேதித்தல் - அறுத்தல்.
சேவகன் - வேலைக்காரன்.
தண்டகாரணியம் - ஒரு காடு, இது முற்காலத்தில் நருமதை நதிக்கும் கோதாவரி நதிக்கும் இடையில் இருந்தது.
தளை - கட்டு.
தன மதம் - செல்வச் செருக்கு, பணக் கொழுப்பு.
தானம் - ஈகை, கொடுத்தல்.
திரவியம் - பொருள்.
தீங்குரல் - இனிய குரல்.
தீரம் - கரை.
துர்ச்சனர் - கெட்டவர்.
தெளித்து - இறைத்து.
தேசாந்தரம் - வேறு நாடு.
நட்பு - சிநேகம்.
நிமித்தம் - காரணம்.
நிர்மானுஷ்யமான - மனிதர் இல்லாத.
நிவிர்த்தி - நீக்குதல்.
நீசன் - இழிவானவன்.
பந்தனை - கட்டு.
பயன் - பிரயோசனம்.
பரம - மேலான.
பராக்கிரமம் - வீரம்.
பரிவாரம் - சூழ்ந்திருப்போர், சேனை.
பரோபகாரி - பிறர்க்கு உதவி செய்பவன்.
பறவை - பக்ஷி.
பாக்கியவான் - செல்வன்.
பாலனம் - காப்பாற்றுதல்.
பிரதிகூலம் - விரோதம்.
பிராப்தியாயிற்று - கிடைத்தது.
பீடித்தல் - வருத்துதல்.
பீடை - துன்பம்.
பொருளிழவு - பொருளை இழத்தல்.
போஷித்தல் - ஆதரித்தல்.
மகா - பெரிய.
மகிமை - பெருமை.
மனோகரம் - அழகு, சந்தோஷம்.
மானம் - பெருமை, வெட்கம்.
மித்திரத்துவம் - சிநேகம்.
மித்திரன் - சிநேகன்.
முகாந்தரம் - காரணம்.
மேகச் சாயை - மேகத்தின் நிழல்.
லகுபதனன் - சலபமாய்ப் பறப்பவன்.
வலிது - பலமானது.
வறுமை - தரித்திரம்.
வனம் - காடு.
விசித்திரம் - அதிசயம்.
வியாபாரம் - முயற்சி.
விலங்கு - மிருகம்.
வீணாகர்ணன் - வீணைபோன்ற காதை யுடையவன்.
வேதனை - துன்பம்.



## இரண்டாவது

# சுகிர்ல்லாபம்

புத்திசாலிகளான சிநேகிதர்கள் திரவியம் இல்லா-திருந்தாலும், வேறே சாதனங்கள் இல்லாதிருந்-தாலும், காகமும் எலியும் ஆமையும் மானும் நட்பி-னால் ஒன்றை ஒன்று காப்பாற்றிக்கொண்டாற்போல, ஒருவர்க்கொருவர் உதவிசெய்துகொள்வார்கள்' என்று **சோமசன்மா** சொல்ல, அரச குமாரர்கள், 'அஃது எப்படி? என, ஆசிரியன் சொல்லுவானானான்:

கோதாவரிக் கரையில் இருக்கும் ஒரு பெரிய வன்னிமரத்தில் லகுபதனன் என்னும் காகம் வாசஞ்-செய்துகொண்டிருந்தது. ஒரு நாள் விடியற்காலத்-தில் அங்கே ஒரு வேடன் வந்தான். **லகுபதனன்** அவனைப் பார்த்துப் பயப்பட்டு, 'இவன் என்ன பண்-ணுவானோ தெரியவில்லை! இதைச் சோதிக்க வேண்-டும்' என்று எண்ணியிருந்தது. அப்போது அவ் வேடன், வலையை விரித்துப் பலவகையான தானி-யத்தைத் தெளித்து, ஒரு செடியின் மறைவிற் பதுங்-கிக்கொண்டிருந்தான். பிறகு, தன் பரிவாரத்தோடு வந்து அந்த மரத்தின் மேல் தங்கின **சித்திரக்கிரீவன்** என்னும் புறாவரசு, அங்கே இறைத்திருக்குந் தானி-யத்தைப் பார்த்தது; பார்த்தலும், தன் பரிவாரப் புறாக்களை நோக்கி, 'இந்த நிர்மானுஷ்யமான காட்-டில் தானியம் எப்படி வரும்? யாராயினுங் கொண்டு

வந்து இறைத்திருக்கவேண்டும்; இது நமக்குத் தெரிந்தாலன்றி இதைத் தின்னலாகாது' என்று சொல்லிற்று. அதைக்கேட்ட ஒரு புறா அதிக கர்வத்தோடு, 'இப்படி ஆலோசித்தால் ஓர் இரையும் நமக்கு அகப்படாது. மேலும், வெட்கப்படுகிறவன், பொறாமையுள்ளவன், சந்தோஷப் படாதவன், குரோதமுள்ளவன், தீராச் சந்தேக முள்ளவன், பிறர் பொருளாற் சீவிக்கிறவன் ஆகிய இந்த ஆறுபேரும் துக்கத்தையே அனுபவிப்பர்' என, மற்றப் புறாக்களும் அந்த இரையைத் தின்னும்பொருட்டு நிலத்தில் இறங்கி வலையில் அகப்பட்டன. புறாவரசன் அதைப் பார்த்து, 'எல்லோரும் நம் சொல்லைக் கேளாமல் இறங்கிவிட்டார்கள்; இப்போது நாம் ஒன்றியாயிருந்து என்ன பயன்?' என்று எண்ணி, அதுவும் பறந்துவந்து தானே அவ் வலையில் அகப்பட்டுக்கொண்டது.

வேடன், பக்ஷிகள் வலையிற் சிக்கிக்கொண்டதைப் பார்த்து, அந்த இடத்திற்கு ஓடிவரத் தொடங்கினான். அதைப் புறாக்கள் கண்டு, சித்திரக்கிரீவனைப் பார்த்து, 'நாங்கள் நீசன் புத்தியைக் கேட்டு உன்னை அவமதித்தோம்; அதன் பலன் பிராப்தியாயிற்று' என, சித்திரக்கிரீவன், 'இப்போது அதைச் சொல்லிப் பயன் என்ன? இதற்கு ஓர் உபாயம் இருக்கிறது. எல்லோரும் ஒருமிக்க வலையோடே பறந்து வேறிடத்துக்குப் போகவேண்டும்; அப்படிச் செய்தால்தான் நம் பிராணனைக் காப்பாற்றலாம்' என, உடனே எல்லாப் பறவைகளும் வலையோடு சடிதியிற் பறந்து போயின. அதை வேடன் பார்த்து ஆச்சரியப்பட்டு, 'இவைகள் ஒருமனப்பட்டு நம் வலையையும் கொண்டுபோயின; ஆயினும், இவைகளுள் ஒன்றுக்கொன்று சச்சரவு

நேரிடும்; அப்போது நம் கையில் அகப்படும்' என்று நினைத்துக்கொண்டு அவற்றின் பின்னே ஓடும்போது, புறக்கள் பறந்துபோய் கண்ணுக்கு மறைந்துவிட்டன. பிறகு, அவன் சிந்தை நொந்து திரும்பி வந்துவிட்டான். இந்த ஆச்சரியத்தையெல்லாம் பார்த்திருந்த லகுபதனன் என்னுங் காகம் அந்தப் புறக்களைப் பின்பற்றிப் போயிற்று. கபோதராஜன் தன் கூட்டத்தைப் பார்த்து, 'கண்டகிநதி தீரத்திலுள்ள சித்திர வனத்தில் என் சிநேகிதனை இரணியகன் என்னும் எலியரசன் ஒருவனிருக்கிறான். அவன் பல்லினாலே நம்முடைய வலையை யறுப்பான். ஆகையால் அங்கே செல்லுங்கள்' என, அதைக் கேட்டு அப்புறக்கள் பறந்துபோய் எலியரசன் வளையண்டை இறங்கின.

ஏதாவது ஆபத்து நேரிடும் என்பதைக் குறித்துத் தன் வளைக்கு நூறுவழி செய்துகொண்டு உள்ளேயிருந்த எலியரசன், அப்போது புறக்கள் இறங்கின சத்தத்தைக் கேட்டுப் பயந்து, அடங்கியிருந்த, சித்திரக்கிரீவன், 'சிநேகிதா, இரணியகா, நீ ஏன் எங்களோடு பேசவில்லை?' என, இதைத் தன் சிநேகனது தீங்குரலென்று அறிந்து, அதிக சந்தோஷத்தோடு வளையினின்றும் சீக்கிரமாக வெளி வந்து, 'நான் புண்ணியவானாகையால் சித்திரக்கிரீவன் என்னும் மித்திரன் என் வீட்டுக்கு வந்தான்; இவ்வுலகத்தில் மனமொத்த மித்திரனோடு சம்பாஷிப்பதினும் வேறே ஆனந்தம் ஏது?' என்று உபசாரம் சொல்லிய பிறகு, அதனுடைய அவஸ்தையைப் பார்த்து மிகவுந் துக்கித்து, 'மித்திரா, நீ எல்லாரைக்காட்டிலும் சமர்த்தனுமே, உனக்கு இப்படிப்பட்ட காரியம் எப்-

படி நேரிட்டது?' என, புறா, 'எந்தக் காலத்தில் எது நடக்குமோ அது நடந்தேவிடும், விதிவலிது; அதன் முன் யாருடைய உபாயம் நடக்கும்? கடல் பெருகி மேலிட்டால் அதற்குக் கரையேது?' என, இரணியகன், 'இந்தப் பேச்சு மெய்யே, நூறு நாழிகை வழித் தூரத்தி லிருந்தே வஸ்துக்களைத் தெரிந்து கொண்டு போகிற நீ இன்றைக்கு வேடன் வலையைப் பாராமற் சிக்கிக்கொண்டாயே! சந்திர சூரியர்களுக்கு ராகு கேதுக்களாற் பீடை வருதலும், யானையும் பறவையும் பாம்பும் கட்டுப்படுதலும், புத்திசாலிகளுக்கு வறுமை வருதலும் தெய்வத்தின் மகிமையே யல்லாமல் வேறன்று' என்று சொல்லி, சித்திரக்கிரீவன் கட்டுண் டிருந்த வலைக் கயிற்றை அறுக்கத் தொடங்கிற்று. அப்போது சித்திரக்கிரீவன், 'மித்திரா, முன்பு என் பரிவாரத்தின் கயிற்றை அறு, பின்பு என் பாசத்தைத் துணி' எனக் கேட்டு, எலி, 'என் பல்லோ மிகவும் மெல்லியது, அதற்குப் பலமும் கொஞ்சம். ஆகையால், இத்தனை பேருடைய பந்தனைகள் அதற்கு எப்படி அறுபடும்? முன் உன் தளையை அறுத்து, பின் என் சாமர்த்தியத்துக்குத் தக்கவாறு அவர்களுடைய தளையையும் அறுப்போன்' என, சித்திரக்கிரீவன், 'கூடாது, முன்னே இவர்களுடைய பாசத்தை அறு' என்றது. இரணியகன், 'தன்னைக் காப்பாற்றிக்கொண்டு தன் பரிவாரங்களைக் காப்பாற்ற வேண்டும். ஏனென்றால், அறம் பொருள் இன்பம் வீடாகிய இவைகளுக்குப் பிராணன் முக்கிய சாதனமாகையால், அதைக் காப்பாற்றினால் எல்லாவற்றையுங் காப்பாற்றினதுபோ லாகிறது' என, சித்திரக்கிரீவன், 'இந்த நீதி சரிதான்; ஆயினும்,

இப்படிப்பட்ட வேதனையி னின்றும் பாலனம் பண்ணுவதற்கன்றோ என்னை இவர்கள் இறைவ-ஞக நினைக்கிறார்கள்? ஆகையால், என் பிராண-னிடத்தில் இச்சையை விட்டு இவர்களைப் பிழைப்பி' என, அதைக் கேட்டு எலி, 'நீ பரம சாது, அடுத்த-வர்களை ஆதரிக்கிறவனாய் இருக்கிறாய். எஜமான-னிடத்தில் விசுவாசமாயிருக்கிற சேவகனும், சேவக-னிடத்திற் பிரீதியாயிருக்கிற எஜமானனும் சுகமடை-வார்கள்' என்று சொல்லி, எல்லாவற்றின் பாசங்களை-யும் அறுத்து, பின்பு சித்திரக்கிரீவனுடைய கட்டைச் சேதித்தது. பிறகு அவ்விரண்டும் ஒன்றையொன்று தழுவிக்கொண்டு பிரிய வார்த்தைகள் சொல்லின. பின்பு சித்திரக்கிரீவன் பரிவாரத்தோடு தன்னிடத்-திற்குப் போய்விட்டது.

லகுபதனன் என்னுங் காகம் இவையனைத்தும் பார்த்து ஆச்சரியப்பட்டு, இரணியகனை நோக்கி, 'நீ பாக்கியவானா யிருக்கிறாய்; ஆகையால், நானும் உன் நட்பை விரும்புகிறேன்; நீ தயைசெய்து எனக்குச் சிநேகனாக வேண்டும்' என, அப்போது எலி, நீ யார்?' என, காகம், 'நான் லகுபதனன் என்னும் காகம்' என்றது. அதைக் கேட்ட எலி, 'ஆனால், உனக்கும் எனக்கும் வெகு தூரம், உலகத்திற் சமானஸ்தர்-களுக்கே சிநேகமுண்டாகிறது; நான் உனக்கு இரை, நீ என்னைத் தின்பவன்; இப்படியிருக்க, இஃது எப்படி நடக்கும்? ஆபத்துக்கே முகாந்தரமாம். உன் உறவு உபயோகமானதன்று' என, காகம், 'உன்னைத் தின்றால் எனக்குப் போதுமா? நீ பிழைத்திருந்தால் நான் சித்திரக்கிரீவனைப்போல் சுகமடையலாம் என்று உன் நட்பை விரும்புகிறேன்' என, எலி 'பின்னும், நீ

எனக்குப் பகைவன் உன்னுடனே நான் சிநேகம் பண்ணுகிறதில்லை. சத்துரு தனக்கு அனுகூலமாயிருந்தாலும் அவனோடு சிநேகிக்க லாகாது. தண்ணீர் வெந்நீராளுலும் நெருப்பை அவிக்கும். ஆதலால் எது தக்கதோ அதைச் செய்யவேண்டும். தண்ணீரில் வண்டியும் பூமியிற் கப்பலும் செல்லுமா? அதனாற் சத்துருக்களிடத்தில் நம்பிக்கை வைக்கலாகாது' என்றிப்படிப் பலவிதமாகச் சொல்ல, காகம், 'நான் உன்னுடன் சிநேகிப்பேன், இல்லாவிடிற் பட்டினியாயிருந்து இங்கேயே ஜீவனை விடுவேன். நெருப்பின் வெப்பத்தினற் பொன் முதலான உலோகங்கள் உருகி ஒன்றுகின்றன; யாதேனும் ஒரு நிமித்தத்தால் விலங்கு பறவைகள் மித்திரத்துவத்தை யடைகின்றன. பயத்தினலாகிலும் யாதோர் ஆசையினலாகிலும் மூடர்களுக்குச் சிநேகமுண்டாகிறது. சாதுக்களுடைய சிநேகமோ கண்ட மாத்திரத்தில் உண்டாகின்றது. மண்பானை சீக்கிரமா யுடைகிறது; பிறகு பொருந்துகிற தில்லை. பொற்குடம் சீக்கிரத்தில் உடையாது உடைந்தாலும் ஒன்றும். இப்படியே துர்ச்சன சற்சனர்களுடைய சிநேக மிருக்கிறது" என, இதைக்கேட்டு இரணியகன், 'உன் வார்த்தையால் நான் சந்தோஷமடைந்தேன்; இப்போது உனக்கும் எனக்கும் சிநேகமிருக்கட்டும், இனி நாம் இருவரும் ஒருமனமா யிருக்கவேண்டும்; உபகாரம் பண்ணுகிறவன் மித்திரன் என்றும் அபகாரம் பண்ணுகிறவன் சத்துரு என்றும் அறிந்து, களங்க மில்லாமல் நடக்கவேண்டும்' என்றிப்படிப் பேசி நிச்சயித்தபின், இரணியகன் லகுபதனனுக்குச் சிறிது ஆகாரம் கொடுத்துத் தன் வளையிற் போயிற்று.

சிநேகலாபம் பெற்ற காகமும் அதனிடம் செலவு பெற்றுக்கொண்டு தன் இடத்திற்குப் போயிற்று. அது முதலாக அவைகள் அத்தியந்த சிநேகமாய், ஒன்றுக்கொன்று ஆகாரங் கொடுத்துக்கொண்டு, பல பல வார்த்தைகள் பேசிக்கொண்டு இருந்தன.

ஒருநாள், லகுபதனன் எலியைப் பார்த்து, 'மித்திரா, இப்போது இங்கே இரை அகப்படாமையால் வேறோர் இடத்துக்குப் போக இச்சிக்கிறேன்' என, அதைக் கேட்டு இரணியகன், 'எங்கே போகிறாய்?' என, லகுபதனன் 'தண்டகாரணியத்தில் கர்ப்பூர கௌரம் என்னும் தடாகத்திலுள்ள மந்தரன் என்னும் ஆமை எனக்குச் சிநேகிதன்; அவன் விதவிதமான மீன்களைக் கொடுத்து என்னைப் போஷிப்பான்; அதைக் குறித்து நான் அவனிடத்திற்குப் போகின்றேன்' எனக் கேட்டு, இரணியகன், 'மித்திரா, அந்த இடத்துக்கு என்னையும் கொண்டுபோக வேண்டும்; நான் தேசாந்தரம் போக விரும்புகிறேன்' என, அப்போது காக்கை, 'நீ அப்படி விரும்புவானேன்?' என, இரணியகன், 'அங்கே போன பின் சொல்வேன்' என்றது. லகுபதனன் இரணியகனை எடுத்துக்கொண்டு அந்த இடத்துக்குப் போயிற்று. அவைகளைப் பார்த்து மந்தரன் சந்தோஷித்து அவ்விரண்டுக்கும் ஆதித்தியம் பண்ணிற்று. அப்போது லகுபதனன் மந்தரனைப் பார்த்து, 'இந்த இரணியகன் மகா பரோபகாரி; இவன் சித்திரக்கிரீவனை அவன் கூட்டத்தோடு வலையினின்றும் விடுவித்தவன்; அப்போது இவன் நட்பு நிலையைப் பார்த்து நானும் இவனுடனே நட்புக்கொண்டேன்' என, அதைக் கேட்டுக் கூர்மம் சந்தோஷப்பட்டு, இரணியகனைப்

பார்த்து, 'மித்திரா, நீ இந்த மனித சஞ்சாரமில்லாத காட்டில் வருவானேன்?' என, அப்போது எலி சொல்லும் :

'சம்பகாவதி என்னும் பட்டணத்தில் சூடாகர்ணன் என்னும் சந்நியாசி யொருவன், தான் உண்டு மிகுந்த சோற்றைக் கப்பரையிற் போட்டு உறியின்மேல் வைத்துவிட்டு நித்திரைபண்ணிக்கொண் டிருப்பான். அந்தச் சோற்றை நான் தின்றுகொண்டு சுகமா யிருக்கும் நாளில், அங்கே வீணாகர்ணன் என்னும் ஒரு சந்நியாசி வந்து, அவனோடு அநேக கதாப்பிரசங்கம் பண்ணிக்கொண் டிருக்கையில், அச் சூடாகர்ணன் தன் கையிலிருந்த ஒரு கழியினால் பூமியைத் தட்டிக் கொண்டு சோற்றைக் காப்பாற்றிக்கொண் டிருந்தான். அப்போது வீணாகர்ணன், 'என்னுடைய கதையை அநாதரவுபண்ணி நடுவே வேறே என்ன வியாபாரத்தி லிருக்கிறாய்?' என, சூடாகர்ணன், 'உன் வார்த்தையை நான் அநாதரவு பண்ணவில்லை; இந்த எலி என் பாத்திரத்தி லிருக்கிற அன்னத்தை நாடோறுந் தின்கிறது, அதை ஓட்டுகிறேன்' என, வீணாகர்ணன் அப்போது உறியைப் பார்த்து, 'கொஞ்ச பலமுள்ள இந்த எலி இவ்வளவு உயரம் எப்படிக் குதிக்கிறது! ஆகையால், இதற்கு ஏதோ காரணம் இருக்கவேண்டும், அதுதான் எதுவா யிருக்கலாம் என்று யோசித்துப் பார்த்தால், இங்கே அதிக திரவிய மிருக்கவேண்டும்; உலகத்தில் திரவிய முள்ளவர்கள் பலமுள்ளவர்களா யிருக்கிறார்கள்; அசாத்தியமான காரியங்களைச் சாதிக்கிறார்கள்; ராஜத்துவத்துக்கும் அது காரணமாகிறது; எல்லாம் அதனு லாகின்றன' என்று சொல்ல, அந்தச் சந்நியாசி அதைக் கேட்டு மெய்தான் என்று

நம்பி, பூமியை வெட்டி, ஐயோ! என் திரவியம் அனைத்தும் எடுத்துக்கொண்டான். அன்று தொடங்கி நான் இளைத்துப்போனேன். பின்பு எனக்கு இரையுங் கிடையாததினால் மெள்ள மெள்ள நடந்துகொண்டிருக்கையில், அந்தச் சந்நியாசி பார்த்து, "பார், இந்த எலி இப்போது தன் ஜாதித் தன்மையை அடைந்திருக்கிறது; முன்னிருந்த தனமதம் போய் விட்டது. ஆகையால், பணமில்லாதவர்களை எல்லோரும் அற்பமாய் நினைக்கிறார்கள்" என, அதைக் கேட்டு நாம் இனி இங்கே யிருப்பது சரியன்று; இதை வேறொருவரோடும் சொல்லலாகாது. பொருளிழவும் கிருகச் சிக்கிரமும் தானமும் மானமும் ஆயுளும் தனமும் ஆகிய இவைகளைப் புத்திமான் வெளியிடலாகாது. தன் விதி பிரதிகூலமா யிருக்குங்காலத்தில் பராக்கிரமமும் முயற்சியும் வீணாகின்றன. பணமில்லாதவனுக்கு வனவாசத்தைக் காட்டிலுஞ் சுகமில்லை. எந்த இடத்தில் நாம் பணக்காரரா யிருந்தோமோ அந்த இடத்தில ஏழையா யிருக்கிறது உத்தமமன்று என்று, இழந்த பணத்தை மறுபடி யெடுத்துக்கொள்ள ஆயத்தப்பட்டேன். அப்போது சந்நியாசி என்னைத் தடியாலடித்தான். அதனாலே மிகவுந் துக்கப்பட்டு உன் சிநேகிதனோடு இங்கே வந்தேன்' என, மந்தரன், 'மித்திரா, நீ இதனால் அதைரியப்பட்டு உறைவிடந் துறந்தோம் என்று வருத்தப்பட வேண்டா; சாதுக்கள் எங்கே போனாலும் மரியாதை பெறுகிறார்கள். சிங்கம் வேறொரு காட்டுக்குப் போனாலும் புல்லைத் தின்பதில்லை; யானையையே தின்னும். உற்சாகமுள்ளவன், சந்தோஷமுள்ளவன், தைரியசாலி, சூரன், களங்கமில்-

ளாதவன் இவர்களிடத்தில் லக்ஷ்மி தானே வந்து அடைகிறாள். நீ பணமிழந்தாலும் எப்போதுஞ் சந்தோஷத்தோடே கூடியிருக்கிறாய். ஆகையால் உனக்குள்ள சுகம் பணத்தாசையால் மயங்குகிறவர்களுக்கு இல்லை. இன்னுங்கேள்: மேகச்சாயை, துஷ்டனுடைய தயை, இளம்புல், பரஸ்திரீ, யௌவனம், தனம் இவைகள் வெகு நாளைக்கு நில்லா. ஆகையால், இவற்றை யிழந்துபோனால் அழுதுகொண்டு ஆகாரத்தைக் குறித்து ஏங்கியிருத்தல் ஆகாது. ஏனெனில், எவன் கர்ப்பத்தில் இடுகிறானோ அவன் பிறக்கிறதற்கு முன்னமே தாயினிடத்திற் பாலை அமைத்து வைக்கிறான். அப்படிப்பட்டவன் ஆயுள் உள்ளவரைக்குங் காப்பாற்ற மாட்டானா? நீ நல்ல விவேகியா யிருக்கிறதினால், இவையெல்லாம் உனக்குத் தெரிந்தே யிருக்கும். இனிச் சிநேகமாய் என்னிடத்திற் சுகமாயிரு' என, இதையெல்லாங் கேட்டு லகுபதனன், 'மந்தரா, நீ சகலகுண சம்பன்னன், மேலுஞ் சற்குணன்; சாதுக்களுக்கு வந்த ஆபத்தைச் சாதுக்களே நிவர்த்தி செய்கிறார்கள் என்பதை அறிந்து நாங்கள் உன்னை நாடி வந்தோம்' என்று சொல்லி, நீண்ட பெரிய மரத்தின்மேற் போய் உட்கார்ந்து, தன் சுபாவப்படியே இங்கு மங்கும் பார்த்துக்கொண் டிருக்கையில், ஏதோ பய முகாந்தரத்தை அறிந்து அவ்விரண்டையும் பார்த்து, 'நீங்கள் உங்களிடத்தில் ஒளித்துக்கொண்டிருங்கள்' என, மந்தரன் நீரிற் போயிற்று. எலி வளையில் நுழைந்தது. காகம் விருக்ஷத்தின் நுனியிலிருந்து பார்க்கையில் ஏதொன்றுங் காணப்படாமையால், பின்பு அம் மூன்றும் ஒன்றுக்கொன்று பேசிக்கொண் டிருக்கையில், அங்கு,

அவற்றின் சமீபத்தில் சித்திராங்கன் என்னும் ஒரு கலைமான் வந்து, 'நான் வேடர் பயத்தால் உங்களிடத்தில் இருக்கலாம் என்று வந்தேன்' என, அதைக் கேட்டு மந்தரன் அதற்குச் சம்மானம் பண்ணி, 'இஃது உன் வீடு, நான் உன் சேவகன் என்று எண்ணிக்கொண்டு சுகமா யிருக்கவேண்டும்' என்று முக மலர்ந்து மனங்கலந்த இன்சொற் சொல்ல, பிறகு அதுவும் இவைகளுடன் நட்புக்கொண் டிருந்தது.

அப்படி யிருக்கையில், ஒரு நாள் சித்திராங்கன் என்னும் மான் புல் மேய வேறோர் இடத்திற்குப் போய் மீண்டும் சாயங்காலம் வாராமையால், 'மேயப்போன மான் இன்றைக்கேன் சாயந்திரம் வரவில்லை' என்று ஆமை விசனப்பட, அதையறிந்து எல்லாம் விசனமுற்றன. மறுநாள் விடியற்காலத்தில் காக்கை பறந்து நாலு பக்கத்திலும் பார்த்துக்கொண்டு போகையில், சித்திராங்கன் தோல் வலையில் அகப்பட்டிருப்பதைக்கண்டு, அதன் அருகிற்போய், 'மித்திரா, உனக்கு இந்த அவஸ்தை எப்படி நேரிட்டது?' என, மான், 'இப்போது இதைக் கேட்டுப் பிரயோஜன மில்லை, நீ போய் இரணியகனைச் சீக்கிரமா யிட்டுக்கொண்டு வந்தால், அவன், வேடன் வருவதற்குள், என் பாசத்தை அறுத்து என்னை விடுவிப்பான். வேடன் வந்தால் ஓர் உபாயமும் நடவாது' என, இதைக் கேட்டவுடனே விரைவாகப் போய், அவைகளுடனே நடந்த காரியத்தைச் சொல்லி, இரணியகனை யிட்டுக்கொண்டு வந்தது. அந்த இரணியகன் மானைப் பார்த்து, 'நீ சமர்த்தனுயிருக்கையில் வலையி லெப்படி அகப்பட்டாய்?' என, மான், 'வல்லமை யிருந்தாலும் வருவது வரும், இப்போது என்னைச் சீக்கிரம் விடுவி,

எனக்குப் பழைய பயம் இருக்கின்றது. முன் நான் குட்டியா யிருக்கையில் வேடன் வலை கட்டி என் கூட்டத்தை வளைத்தான். மற்றவை பெரிய மான்களா யிருந்தபடியாற் குதித்து வலையைத் தாண்டி ஓடிப் போயின. நான் குதித்து ஓடச் சக்தி யில்லாமல் பிடி-பட்டேன்; ஆதலால், வேடன் பிடித்து அரசனிடம் கொண்டுபோனான். அரசன் வாங்கித் தன் பிள்ளை கையிற் கொடுக்க, அங்கே நான் வெகுநா ளிருக்கை-யில், ஒருநாள் மேக கர்ச்சனையைக் கேட்டு அதிக சஞ்சலப்பட்டு,'காற்றுமழையாற் பீடிக்கப்பட்டு மான் கூட்டங்கள் ஓடும்போது அவற்றின் பின் நானும் ஓடுவேனோ?' என்று மனுஷ பாஷையில் எனக்குள் பேசிக்கொண்டேன். ராஜகுமாரன் இதைக் கேட்டு, நாற்றிசையும் பார்த்து என்னையும் பார்த்தான். பின்பு சற்றுநேரம் சும்மா இருந்து, இது மனுஷனைப்போல் எப்படி உச்சரித்தது? ஆகையால், இது விசித்திர பிராணியா யிருக்கிற தென்று நினைத்து, பயத்தினாற் சுரத்தில் விழுந்தான். பிறகு ராஜா விடியற் காலத்தில் ஜோதிஷர்களை அழைப்பித்து அவர்களுடனே இதைச் சொல்ல, அவர்கள் 'சகல மிருகங்களும் மனிதரைப் போற் பேசுகின்றன; ஆயினும் நமக்கு முன்னே பேசு-கிறதில்லை, அதுவும் உன்னைப் பாராமற் பேசிற்று. இதற்காக நீ பயப்படவேண்டா; இஃது ஒரு விசித்திர பிராணியன்று. இதனால் உனக்கு எவ்வளவும் பயம் இல்லை' என, இதைக் கேட்டு ராஜகுமாரன் என்னை விட்டுவிட்டான். பிறகு இந்தக் காட்டில் வந்தேன். இப்படி முன் ஒரு தரம் வலையில் அகப்பட்டேனாகை-யால், என்னை விரைவில் விடுவிக்கச் சொல்லுகிறேன்' என, இதற்குள் மித்திரத்துவத்தினாலே மந்தரனும்

அங்கே வந்து இரணியகனைப் பார்த்து, 'மித்திரா, இப்படித் தாமசம் பண்ணுவது சரியன்று. இப்போது வேடன் வந்தால் நாமெல்லாம் ஓடிப்போவோம். வலையிலகப்பட்ட சித்திராங்கனைப் பிடித்துக்கொள்வான். அதைக்குறித்து எனக்குக் கிலேசமாயிருக்கிறது. நினைப்பின்படி மனத்தி விருப்பதை அறிகிற சிநேகிதனும், மனோஞ்ஞை ஸ்திரீயும், பிறர் துக்கமறிகிற பிரபுவும் கிடைக்கிறதருமை' என்றிப்படி மந்தரன் சொல்லிக் கொண்டிருக்கையில், வேடன் சடிதியில் எமனைப்போல் தூரத்தில் வருவதை லகுபதனன் கண்டு, எலியைப் பார்த்து, 'மித்திரா, வேடன் வந்தான்; இப்போது பெரிய சங்கடம் நேரிட்டது' என, அதைக்கேட்டு இரணியகன் அதிசீக்கிரமாய்ச் சித்திராங்கன் வலையை யறுத்தது. அறுத்த வுடனே கிட்டவந்த வேடனைப் பார்த்து எல்லாம் ஓட்டம் பிடிக்க, அப்போது அவன் விசனமடைந்து நாலண்டையும் பார்க்கையில் மந்தரன் தன் நடைபின்படி நடந்துகொண்டிருந்தது. வேடன் பார்த்து அதைத் தன் வில்லிற் சேர்த்துக் கட்டிக்கொண்டு கொஞ்சஞ் சந்தோஷத்தோடே போகும்போது, மானும் எலியும் காகமும் மிகவுஞ் சிரமப்பட்டு, இப்போது என்ன செய்யலாம் என்று, வேடன் பின்னே போகத் தொடங்கின. அப்போது இரணியகன், 'ஒரு சங்கடம் நிவிர்த்தி யாகிறதற்குள்ளே மற்றொன்று வந்து நேரிட்டது. ஆகையால், சீவன் தேகத்தோடே அநேக துக்கங்களை அனுபவிக்கவேண்டி யிருக்கிறது. இந்தத் துன்பம் சிநேகத்தினால் நமக்கு வந்தது. எவன் மித்திரனிடத்தில் விசுவாசம் வைக்கிறானோ அந்த விசுவாசம் அவனுக்குத் தாய், தந்தை, சகோதரன், பிள்ளை,

சுற்றங்களிடத்திலும் இராது' என்றிப்படி வெகுவிதமாய்த் துக்கித்துப் பின்னும், 'வேடன் தூரமாகப் போவதற்கு முன்னே மந்தரனை விடுவிக்கத் தக்க உபாயம் பண்ணவேண்டும், பிறகு ஆகமாட்டாது' என, அப்போது அவைகள், 'என்ன செய்யலாம் சொல்?' என, எலி, 'சித்திராங்கன் ஏரிகரையில் செத்தவனைப்போலக் கிடக்கவேண்டும்; அதன்மேற் காகம் உட்கார்ந்துகொண்டு பொய்யாகக் குத்தவேண்டும்; அப்படியிருந்தால் அதை வேடன் பார்த்து மந்தரனைப் பூமியில் வைத்துவிட்டு மானண்டை போவான்; இதற்குள்ளே நான் ஆமையின் கட்டைச் சேதிப்பேன்; பிறகு அவ்வாமை தண்ணீரில் ஒடிப்போம்' என, இதைக் கேட்டு எல்லாம் அவ்வாறே செய்து மந்தரனை விடுவித்தன. பிறகு அந்த வேடன் வாய்த்தவிடம் போய், அடுப்பு நெருப்பும் இழந்தவள் போல வெட்கி மிகவும் வருத்தமடைந்து, 'கைக்கு வாராத பெரிய லாபத்தை இச்சித்துக் கைக்கு வந்த சிறிய லாபத்தை யிழந்தேனே! யார்க்கும் அதிக ஆசை அதிக நஷ்டம்; கிடைத்தமட்டும் போதுமென்று நினைக்கிறவனே மகா புருஷன்' என்று இங்ஙனம் எண்ணிக்கொண்டு தன் வீட்டுக்குப் போனவுடனே, அந்தக் காகமும் ஆமையும் மானும் எலியும் அதிக சந்தோஷமடைந்து தங்களிடத்தில் முன்போல வாழ்ந்திருந்தன.



# சுகிர்ல்லாபம்

---

1. தெள்ளிய திரைநீர்க் கோதா
   வரிநதித் தீரம் சூழும்
கள்ளவிழ் வனத்துக் குள்ளோர்
   கருக்குமுள் ளிலவில் வாழும்
புள்ளினுக் கதிக மான
   புத்தியுத் தியின னாகி
எள்ளலில் லாதி ருக்கும்
   லகுபதன் என்றோர் காகம்.

2. வைகறை எழுந்து தங்கள்
   வகையினத் துடனே ஆங்கோர்
பொய்கையின் மூழ்கி ஏறிப்
   புணர்சிற குலர்த்தும் போது
கைகளில் வலையும் வில்லும்
   கணைகளும் கொண்டு வேடன்
செய்கொலை பயில அங்கே
   சேர்ந்தனன் அவனைக் கண்டே.

3. பறந்தன காகம் எல்லாம்
   லகுபதன் ஒன்றும் ஆங்கே
மறைந்திவன் கொடியோன் செய்யும்
   வகையெல்லாம் அறிவோம் என்ன
அறைந்தொரு பொதும்பர்க் குள்ளே
   ஒளித்துப்பார்த் திருப்ப ஆங்கே
சிறந்ததோர் வலையைச் சூழ்ந்து
   தீனியும் தெளித்து வைத்தான்.

4. வைத்தவன் மறைந்தி ருக்கும்
சமயத்தில் மன்ன னான
சித்திரக் கிரீவன் என்னும்
புறாவொன்று சேனை சூழப்
பைத்தஅவ் வனத்திற் போந்து
பாங்கொரு மரத்தில் தங்கி
மொய்த்தஅத் தானி யத்தை
முற்படக் கண்ட தன்றே.

5. கண்டஅப் புறவின் வேந்து
கருத்தினில் ஆய்ந்து தன்பால்
கொண்டநற் பரிவா ரத்தைக்
குறித்தது கூறும் இந்த
உண்தகு தானி யந்தான்
உற்றதெவ் வாறிக் கானில்
எண்தரும் ஒருவர் யாரோ
இறைத்துவைத் திருக்க வேண்டும்.

6. ஈதுநாம் அறியும் முன்னே
இவ்விரை தனைவி ரும்பி
மீதுறப் பறந்து சென்று
விழுங்கிட முயல்வோ மாயின்
தீதுவந் திடுதல் திண்ணம்
தீரவே யோசியாமல்
ஏதுமிங் கியற்ற லாகா
தென்பதும் இதனா லன்றோ.

7 அப்படிச் சொலப்பு றாவொன்
றகம்செருக் குற்றுக் கூறும்
இப்படி யெல்லாம் பார்க்கில்
இரைபெறா திறக்க வேண்டும்

எப்படி எக்கா லத்தில்
எய்துவ தெய்தும் என்று
செப்பலும் புறாக்கள் எல்லாம்
சென்றந்த வலையிற் பட்ட.

8. ஆங்கது கபோத வேந்தன்
அல்லலின் நோக்கி அந்தோ
ஈங்கிவை எல்லாம் மாள
இருந்துயிர் வாழ்வ னோநான்
தாங்கிய வலையிற் பட்டுச்
சாவதே தக்க தென்று
போங்கடு விசையிற் சென்று
பொள்ளென வீழ்ந்த தன்றே

9. இடுக்கண்வந் துற்ற தென்ன
இதையினித் தப்பு மாறு
பொடுக்கென வலையைக் கொண்டு
போவதே கருமம் என்று
திட்படச் சொலக்க போதச்
சேனைகள் ஒருங்கு கூடி
அடுத்துநீள் வலையைக் கொண்டே
ஏகின விசும்பின் அம்மா.

10. வேடனும் அதிச யித்து
விரைந்துபின் நடந்தோ மாகில்
ஓடியே இளைத்து வீழும்
ஒருங்குடன் வளைந்து கொண்டு
சாடலாம் எல்லாம் என்று
தன்மனத் தெண்ணிக் கொண்டே
ஓடினன் கண்ணிற் காணு
தோடின புறாக்கள் அன்றே.

11. காகமும் கூடி ஓடக்
கானவன் களைத்து மீண்டான்
ஏகின கபோத மன்னன்
எமதுநற் றோழ னானை
ஆகுவாம் இரணி யன்வாழ்
அடவிஇங் கிதுவே அப்பாற்
போகலா காதென் றங்கே
பொருந்திவந் திறங்கும் போது.

12. இரணியன் கண்டு கூட்டம்
ஏதென வளையிற் செல்லக்
கரவுறு வளையி லந்தக்
கபோதமும் மூக்கை வைத்து
விரகுளா நண்பா என்று
விளித்தலும் தெரிந்து வந்து
பரவிச தேது கண்ணி
பட்டவா றெவரோ அந்தோ.

13. இறந்தது நிகழ்ந்த தும்பின்
எதிர்வது மான காலம்
அறிந்தநீ ஏதி னாலே
அடர்வலைப் பட்டாய் என்னச்
சிறந்தபே ரறிவி னாலும்
செப்பிய சமர்த்தி னாலும்
துறந்தவர் யாவர் சொல்லாய்
தொல்லைவல் வினையைத் தானே.

14. எவ்விடத் தெக்கா லத்தில்
எவ்வகைக் கார ணத்தின்
எவ்வள வெவரா லேதான்
இருவினை அனுப வங்கள்

அவ்விடத் தக்கா லத்தின்
அவ்வகைக் கார ணத்தின்
அவ்வவ ரவரா லேதான்
அனுபவம் எய்து மன்றே.

15 என்றுதான் கபோதம் சொல்ல
இரணியன் கடலின் மீனும்
துன்றுமா காயப் புள்ளும்
தொடர்வலைப் படுத லாலும்
குன்றுநேர் களிறும் வெய்ய
கொலைபயில் அரவு தானும்
நின்றுகட் டுண்டு நெஞ்சம்
நிலைதளர் திறத்தி னாலும்.

16. வானுறு சுடர்கள் பாம்பால்
வருந்துத லானு மிக்கோர்
ஆனநற் புலவர் தாரித்
திறத்தினை யுழங்க லானும்
ஈனராம் அறிவி லார்பால்
இருநிதி சேர்த லானும்
தானிரு வினையை யாரும்
தள்ளுதல் அரிதே என்று.

17. இன்னநன் னீதி சொல்லி
இரணியன் இரங்கி நண்பன்
தன்னிரு காலிற் பூண்ட
தளையுடன் சேனைக் காலில்
பின்னிய வலையும் சின்ன
பின்னமாக் கடித்து விட்டே
பன்னிய உபசா ரங்கள்
பகர்ந்துபின் அனுப்பிற் றம்மா.

18. ஏகின புறுக்கள் மற்றவ்
விரணியன் வளையிற் செல்லக்
காகமிங் கிவைகள் எல்லாம்
கண்டெலி நண்பன் மேலே
மோகமாய் வளையின் வாயின்
முகத்தைவைத் தழைத்த லோடும்
ஆருநீ யாரே என்னை
அழைத்தகா ரியமெ தென்ன.

19. யானொரு காகம் என்பேர்
லகுபத னன்றன் என்பார்
கானவ னாலே நைந்த
கபோதமன் னவன்பின் வந்தேன்
மானமும் குணமும் நட்பும்
வரிசையும் உறவும் கண்டு
நானும்உன் நண்பு கொள்ள
நாடியே அழைத்தேன் என்ன.

20. தின்னிரை நானும் கொன்று
தின்பவன் நீயும் கூடி
இந்நிலந் தன்னின் நட்பாய்
இருந்திடல் ஆபத் திற்கே
மன்னிய இடம தாகும்
வருநரி நட்புத் தன்னால்
முன்னமோர் வலையி லேமான்
பட்டிடும் முறைமை போன்றே..

21. அன்னது கேட்ட காகம்
அகங்கரைந் துரைக்கும் ஐயோ
என்னைநீ உரைத்தாய் என்றன்
இயல்பினைச் சிறிதும் தேராய்.

உன்னையான் கொன்று தின்றால்
ஒருகணப் பசிதீ ராதே
மன்னிநட் பாயி ருக்கில்
வாழலாம் அனேக காலம்.

22. சித்திரக் கிரீவ னைப்போல்
சேர்ந்தெனை நட்புக் கொண்டால்
எத்தனை நாள்என் ஆவி
இருக்கும்உள் ளளவும் உன்மேல்
மைந்தநண் பொழிவ தில்லை
மற்றிது கபடம் அல்ல
சத்தியம் என்று காகம்
சாற்றியே மேலுங் கூறும்.

23. எறிதிரைப் பரவை நீரில்
எரியும்ஓர் கொள்ளி புக்கால்
செறிபுனல் வற்றி டாது
தீஅவிந் திடும்அவ் வாறே
அறிவுளா ரிடத்திற் கோபம்
அடைந்திடா தடைந்த தேனும்
உறுதியா மனத்தி லேதான்
ஒறுத்ததை அவிப்பார் அன்றே.

24. உரைசெய்கா கத்தை நோக்கி
உன்னது புத்தி யென்றும்
திரமிலை உன்னைச் சேர்க்கில்
செய்கரு மங்கள் ஆகா
புரைபடும் எனவே என்றன்
புத்திஉன் புத்தி யூடே
வரையறக் கலந்தே யந்த
வகையில்நட் பாவோன் என்று.

25. கடலின்மே லோடுங் கப்பல்
கரையின்மேல் ஓட்ட லாகா
படவிமே லோடுந் தேரைப்
புணரிமேல் ஓட்ட லாகா
திடமுடன் கூடா தென்றும்
சேர்வதும் இல்லை சேர்ந்தால்
கெடுவதே உறுதி யல்லாற்
கேண்மையா தொன்று மில்லை.

26. நாரியர் விருத்தர் சிலர்
நியாயமும் துட்டர் செய்யும்
காரிய நலமும் மெய்யாக்
கருதியே நட்புக் கொண்டே
பொருல கத்தில் இன்பம்
பெற்றவ ரில்லை துன்பம்
சேருவர் மடியிற் பாம்பைச்
சேர்ப்பவர் போல என்ன

27. உள்ளது தானே துட்டர்
உறவொரு காலும் ஆகா
தென்னிப்போய் ஈதோர் காக்கை
யென்றுநீ செப்பி டாதே
வள்ளலே நினக்கு நான்றுன்
மன்னுநட் பாவேன் நீதான்
தன்னினல் உயிர்இ ழப்பேன்
சத்திய மென்று கூறி.

28. மாந்தருக் கெல்லாம் நட்பு
வரும்திர வியத்தி னாலே
போந்திடு பறவைக் கெல்லாம்
புசித்திடு நிமித்தத் தாலே

காய்ந்திடு நாட்டார்க் கெல்லாம்
கண்டிநர் புத்தி யாலே
தேர்ந்திடு பெரியோர்க் கெல்லாம்
தெரிசனத் தாலே எய்தும்.

29. நல்லவர் கண்ட போதே
நட்பின ராவர் பொல்லாப்
புல்லியர் தண்டத் தாலே
பொருந்திநட் பாயி ருப்பர்
மெல்லிய ஊசி காந்த
மேவிடுந் தண்ட மான
வல்லிரும் பெரியில் வெந்து
வருந்தியே ஒட்டும் அன்றே.

30. நின்னுடை அறிவு நெஞ்சில்
நேயமும் உபாய முங்கண்
டுன்னுடை நட்பு வேண்டி
உற்றுனை தருகே வந்தேன்
என்னுடை அறிவும் நெஞ்சில்
இரக்கமும் சகாய மும்நீ
மன்னியிங் கறிதி யென்று
வாயச வேந்தன் கூற.

31. நன்றென இரலை யன்றான்
நகைமுக மாகி நட்பால்
என்றும்நாம் இடைவி டாமல்
இருப்பம்என் றனுப்பக் காகம்
வென்றிகொள் புலிஇ ரத்தம்
வீந்தபான் இறைச்சி தானும்
தின்றெலி தனக்கோர் பங்கு
தினந்தினம் அளித்து வாழ்ந்த.

32. அந்தநாள் தம்முள் ஓர்நாள்
அடவியில் இரைகள் இல்லை
முந்தவே எனக்கு நட்பாய்
முயங்கிடும் ஆமை பின்பேர்
மந்தரன் அவன்பாற் செல்லின்
வாவியின் மீன்க ளெல்லாம்
தந்திடும் நாமும் தின்று
தருக்கியங் கிருக்க லாமே.

33. என்னவே எலியும் நெஞ்சில்
எனக்கொரு கருமமுண்டாங்
கன்னது கனைநின் னோடே
ஆங்குவந் துரைப்பேன் என்னத்
தன்னிரு காலாற் கொண்டு
தானும்வான் நெறியாற் செல்ல
மன்னிய ஆமை கண்டு
வந்தெதிர் கொண்டி ருந்தே.

34. இற்றைநாள் வரையும் நன்றாய்
இருந்தையோ நண்ப என்றே
உற்றநற் கருமம் பேசி
உபசரித் திருக்கும் போழ்தில்
மற்றெலி யாதென் றுமை
வினவயாம் வருந்தி முன்செய்
நற்றவப் பயனால் வந்த
நலந்தரு நண்பன் காணே.

35. இங்கிவன் பெருமை சொல்லில்
யாவரான் முடியும் சேடன்
தங்கும்ஆ யிரநா வாலும்
சாற்றினும் முடியா தென்று

துங்கமாம் கபோத ராசன்
தொடர்வலைப் பட்ட வாறும்
அங்கதை விடுத்த வாறும்
அடைவுடன் சொல்லிற் றம்மா.

36. சொல்லலும் கமட வேந்தன்
தோழனிங் கிவனே என்று
நல்லுப சாரம் சொல்லி
நண்புகொண் டிருகை யாரப்
புல்லிமேமோந் தருகி ருத்திப்
பொருந்திய விருந்து மிட்டே
எல்லையில் களிப்பி னோடும்
இருந்திர ணியனை நோக்கி.

37 உன்னிடம் ஏது நீயிங்
குறைசரித் திரந்தான் ஏது
நின்னிடம் விட்டு மிங்கே
நேர்ந்தகா ரணம்ஏ தென்ன
என்னுடை நகரம் சம்ப
காவதி யென்ப தீது
தன்னில்ஓர் தவசி மேவும்
தனிமடம் ஒன்றுண் டென்றும்.

38. பெருவளைக் குள்ளி ருப்பேன்
பிஞ்ஞகன் சன்னி யாசி
தெருவெலாம் பிச்சை தேர்ந்து
சிறிதுதான் புசித்து மீதி
ஒருசிறு பாத்தி ரத்துள்
பெய்துவே றென்றால் மூடி
வருபர தவசிக் கென்று
வைத்தனன் உறங்கும் போதில்.

39. வந்தான் அந்தச் சோற்றில்
வயிறுகொள் ளாதைஅ ருந்தி
அந்தமா யோகி கையில்
அகப்படா தொளித்துக்கொள்வேன்
இந்தவா றனேக காலம்
இருக்குநாள் களிலே ஓர்நாள்
புந்திகூர் ஞானி தன்பால்
பொருந்தினன் ஒருசன் னியாசி.

40. பொருந்திய அவனும் தானும்
பொருவில்லாத் திரங்கள் பேசி
இருந்தனர் அனேக நேரம்
யானும்வெம் பசியினாலே
வருந்தினன் வளைவிட்டு
வந்துபாத் திரத்திற் சோற்றை
அருந்திய சத்தம் கேட்டே
அதட்டியே துரத்திவிட்டான்.

41. துரத்திய சூடா கன்னன்
தோழன்அங் கவனை நோக்கி
விரத்தனு யிருந்து ஞானம்
வினவிய உனக்கிப் போது
கருத்துவே றுற்ற தென்ன
காரணம் என்று கேட்கத்
தெரித்திடும் உனது சொல்யான்
அனுதரம் செய்ய கில்லேன்.

42. எலிக்கிந்தக் குதிப்பைக் கண்டே
யூன்மனம் வெருவிற் றுப்
பலிக்குநான் உழன்றெ டுத்த
பத்தெலாம் தின்றுகொண்டே

கெலிப்புடன் உளதிங் கையா
கிட்டினும் பிடிக்கக் கூடா
தெலிக்குள்இப் படிநான் கண்ட
தில்லையென் றிரங்கிச் சொன்னான்.

43. அன்னவன் றன்னை நோக்கி
அதிசியல் வெலிஒன் றேயோ
பின்னையும் உண்டோ என்னப்
பெரொலி ஒன்றே யென்றான்
சின்னஇவ் வெலிக்கு வன்மை
சேர்ந்தது வியப்பே அன்றே
என்னவும் கூடா கர்ணன்
இதுமிக வியப்பே என்றான்.

44. ஆரணன் அறிந்து கொண்டான்
அப்படி நாமும் இந்தக்
காரணம் அறிவோம் என்று
கடுகியே கொட்டெ டுத்துப்
பாரளை அகழ்ந்து வெட்டிப்
பார்க்கநான் ஓடிப் போனேன்
சோரஅங் கிருந்த செம்பொன்
திரளெலாம் எடுத்துக் கொண்டார்

45. வேறொரு வழியில் வைகி
வெம்பசி தனக்கு முன்போல்
சோறுநான் அருந்தப் போனேன்
தூரத்தில் தடித்தான் இன்று
காறுமங் கவர்ப டத்தைக்
கருதவும் பயந்து திங்கள்
ஆறுமோ ராறும் வேறோர்
அடவியுக் கிருந்தேன் யானே.

46. திரவியந் தானே புத்தி
திரவியந் தானே வித்தை
திரவியந் தானே சுத்தம்
திரவியந் தானே சித்தி
திரவியந் தானே சக்தி
திரவியந் தானே முத்தி
திரவியந் தானே யாதும்
செய்வதல் லாதும் உண்டோ.

47. சத்துவம் புத்தி வித்தை
சதுர்விதார்த் தங்க ளான
இத்தனை விதமும் செல்வம்
இல்லையேல் இல்லையாகும்
சத்துவம் புத்தி வித்தை
சதுர்விதார்த் தங்க ளான
இத்தனை விதமும் செல்வம்
எய்திடில் எய்தும் அன்றே.

48. சுதியிலார் பாட்டும் தங்கள்
சுற்றமில் லாத நாடும்
மதியிலார் கவியும் நல்ல
மனைவியில் லாத வீடும்
பதியிலார் அழகும் பாழே
பார்க்கிலிங் கிவைபோல் அல்ல
நிதியிலார்க் கெவையும் பாழே
நினைக்கின்அு வுலகி னுள்ளும்.

49. கதிரவன் இலையேற் கண்ணிற்
காண்பன மறையு மாபோல்
நிதியமொன் றிலையேல் யார்க்கும்
நீதிமா ஞானம் போதம்

துதிபெறு கீர்த்தி ஆண்மை
சூழ்ச்சிமந் திரவி சாரம்
சதுரபி மானம் எல்லாம்
தன்னிலே மறைந்து போமால்.

50. வறுமையா லேயா சிக்க
வருமவர் தமக்கும் ஆவி
இறுமவர் தமக்குஞ் செய்யும்
இயற்கையொன் றுமே தென்னில்
உறுதிபோம் கைகால் சோரும்
உள்ளமும் கலங்கும் மெய்யும்
குறுகிபோ நடுங்கும் வாயும்
குழறுநல் லறிவும் போமே.

51. பொன்னின்மே லிருந்து சோற்றைப்
புசித்தனை பொன்னும் போச்சே
இன்னமும் உனக்கு வெட்கம்
இல்லையோ என்று கூடா
தன்னன்முன் சொன்ன தென்றன்
கருத்துளே வருத்த லாலே
நின்னைவந் தடைந்தேன் என்னை
நீஇனிக் காப்பாய் என்ன.

52. இரணியன் தன்னை நோக்கி
இலகுபத னன்கண் நீயும்
திரமுடன் வந்து சேர்ந்த
செல்வம்முற் பிறப்பி லேயான்
பரவிய தெய்வம் தந்த
பாக்கியம் அன்றோ என்று
புரைவற நண்பு கொண்டு
பொருந்தியங் கிருந்து கொண்டே.

53. மந்தரன் மீன்கள் கொண்டு
வரலது பதனன் போகி
எந்தடை வேணு நல்ல
இறைச்சிகள் கொண்டு செல்லச்
சுந்தர இரணி யன்போய்ச்
சோறுகொண் டேக மூன்றும்
சந்ததம் கூடி உண்டு
தருக்கியங் கிருக்கும் நாளில்.

54. கான வேடனைக் கண்டு நடுங்கிய
மானின் ஓர்கலை மான்அவன் எய்தலும்
ஞானந் தானும் இலாதண்ப னோஉளர்
என்ந டுங்கினை என்று வினவவே.

55. வெஞ்ச மன்புரை வேடன் ஒருவனே
நஞ்ச அம்புகொண் டெய்ய நடுங்கியே
தஞ்சம் இங்கின்மை யால்உமைச் சார்ந்தனன்
அஞ்சல் என்றப யந்தரு வீர்என.

56. நல்ல துன்பெயர் யாது நவில்என
எல்லை மன்சித்தி ராங்கன் எனச்சொல்வார்
சொல்லும் தந்தைதாய் சுற்றமொன் றின்மையால்
புல்லுங் கானம் புகுந்து வருந்தினேன்.

57. தந்தை தாய்தமர் நீவிர்நும் தஞ்சமாய்
வந்த என்மிசை நண்புவைத் தீரெனில்
எந்த நாளும் உமைப்பிரி யேன்என
மந்த ரன்முதல் மூன்றும் வகுக்குமால்.

58. நன்று நாம்இனி நால்வரும் கூடியே
ஒன்று சிந்தைய ராகி ஒருமையாய்
என்றும் வாழ்வ தியல்பென எண்ணியே
அன்று மூன்றும் அபயம் அளித்தவே.

59. நான்கும் இப்படி நல்லூற வாகியே
ஆங்கு வைகும் அளவினில் ஓர்பொழு
தோங்கு மாறிரைக் கோடிஓர் காட்டினில்
தேங்கு வேடன் வலையினில் சிக்கியே.

60. சித்தி ராங்கன் திகைத்தது கண்டுதான்
சத்து காகத்தின் பாலைதம் காதுற
மெத்தும் ஆமையும் மூடிக மும்விரைந்
தத்தி சைக்கண் அடைந்ததைக் கண்டவே.

61. காக்கை சென்றெதிர் கூவிக் கதறியே
தீக்கண் வேடன் வலையினிற் சிக்கியே
நோக்கும் நவ்வி நடுங்கும் வருத்தத்தை
நீக்க வேண்டும் நிமிடத்தில் என்னவே.

62. கூடி மூன்றும் குறுகி வலைக்குளே
வாடி நின்ற மறிமுகம் நோக்கியே
பீடு சாலும் அறிவிற் பெரியை நீ
ஓடி இவ்வலை உற்றதென் னோவென.

63. பின்னை வேண்டின பேசதும் வேடன் வந்
தென்னை ஆவி இறுத்திடு முன்னமே
மன்னு காலில் வலையை விடுத்திடென்
றன்னு மூடிகத் தோடுரை செய்யவே.

64. என்ன பீதி உனக்கென் றெலிசொல
முன்னை நான்குரு ளைப்பரு வத்திலே
அன்னை யோடும் அடவியில் வைகினேன்
துன்னு வேடன் பெருவலை சூழ்ந்தனன்.

65. தாவி அந்த வலைதனைத் தாண்டிஓர்
காவில் வீழ்ந்தனன் கண்டு கடுங்கொலைப்
பாவி என்னைப் பிடித்துப்போய்ப் பட்டணக்
காவ லன்மகிழ் காணிக்கை ஈந்தனன்.

66. அந்த மன்னன் குமாரர்க் களித்தலும்
மைந்தர் சிந்தை மகிழ்ந்து களிப்பினால்
சந்த தம்வினை யாடித் தருக்கியே
பந்த மிட்டுவைத் தாரப் பகலிலே.

67. மழைமு ழக்கி வருதலும் நாமும்நம்
உழைமி னத்துடன் ஓடித் திரிந்துபைங்
குழைமு றிப்பதெந் நாளெனக் கூறிநின்
றழுத ரற்றினன் அன்னது கேட்டலும்.

68. என்ன காரண மோஅறி யோம்இது
தன்னை நான்தடை செய்வது தன்மமன்
றென்ன எண்ணி எனைவிடுத் தார்இள
மன்னர் நான்இவ் வனத்தினில் உற்றனன்.

69. என்று கூறி இரங்க இரணியன்
வென்றி வேடன் விரைந்து வருமுனம்
சென்று காவில் வலையைச் சிதைத்தலும்
கன்று மானும் கடுகி நடந்ததே.

70. தீமை வேடன் விரைந்துசென் றுன்னவி
பூமி வாய்வலை புக்கங் கொளித்தது
வாம மேவு கொடிமரத் தேறவே
ஆமை தான்நடை யான்முட்ட தானதே.

71. வந்த வேடன் மனது மயங்கியே
அந்த மானின் அடிதொடுத் தோடலும்
முந்தும் ஆமை முடங்கிக் கிடந்ததைப்
பந்த மார்வலைப் பையினிற் கட்டியே.

72. மானின் மேல்மனம் வைத்து மயங்கியே
ஆன வேடுவன் ஆமைகொண் டோடவே
ஞான பார்கொடி வைக்கண்டு நண்பனைக்
கானம் நீங்குமுன் மீட்கக் கருதியே.

73. ஆகு வெந்தன்நம் ஆமையைக் கொண்டவன்
போக நாங்கண் டிருத்தல் பொல்லாதுமுன்
ஏகி மாறுடு கூடி இதற்குவே
றாகம் என்னுவம் வாயன் றுரைத்ததே.

74. என்று ரைத்தலும் கேட்டிகல் வேடனை
வென்று நண்பன் இடர்விலக் காமலே
சென்று நாமஉயிர் வாழ்வது தீதென
ஒன்று நண்பிற் கொடியும் உரைத்ததே.

75. கோல மார்எலி நன்றெனக் கூறலும்
காலி னால்அங் கிடுக்கிக் கணத்தினில்
சால வேமறந் தக்கலை தன்னுடன்
ஓல வேயொரு நன்மை உரைசெயும்.

76. தத்து நீர்க்கரை தன்னில் விழுந்துநீ
செத்த தென்னக் கிடந்திடு சேர்ந்துனைக்
கொத்து வென்அது கொண்டவன் ஆமையை
வைத்து நின்னை எடுக்க வருவனே.

77. அந்த வேளை இரணியன் ஆமையின்
பந்த நீக்கி வளைபுகும் பைம்புனல்
மந்த ரன்புகும் நான்பறப் பேன்அவன்
முந்த நீயும் ஒளித்திடு வாயென.

78. நல்ல சூழ்ச்சிசொன் னையென நண்ணியே
மெல்ல நீர்க்கரை மான்கலை வீழ்ந்தது
புல்லு காகம் புசிக்க விழுந்தபோல்
மெல்ல வேஅதன் மீதில் விழுந்ததே.

79. கண்டு வேடன் கலைக்கார் தெளிந்திதைக்
கொண்டு போதும் எனக்குலத் தாமையை
மண்டு நீர்க்கரை தன்னில்வைத் தோடினன்
பண்டு போல்எலி பாசம் கடிக்கவே.

80. மானை வேடன் குறுகவும் மான்ஒரு
கானில் வீழ்ந்தது காகம் பறந்தது
கூனல் ஆமை குளத்தினில் வீழ்ந்தது
ஞான மூடிகம் நல்வளை புக்கதே.

81. வேடன் ஓடி விடாய்த்தவன் மீளவே
கோடு லாவிய வாயசம் கூறவே
நாடி நான்கும்அங் கோரிடம் நண்ணியே
கூடி வாழ்ந்து குலாவி இருந்தவே.

82. ஆத லால்நல்ல வர்கள் உறவுபோல்
ஊதி யம்பிறி தில்லை உயிர்க்கென
வேதி யன்சொல வேந்தன் குமாரரும்
நீதி யாம்என நேயம்வைத் தார்களே.



## செய்யுட் பாடத்தில் வரும்

# அருஞ்சொல் அகராதி

அகம் - மனம்.
அகங் கரைந்து - மனம் இளகி.
அகழ்ந்து - தோண்டி.
அஞ்சல் - பயப்படாதே.
அடர் - நெருங்கிய.
அடவி - காடு.
அதிதி - பரதேசி, விருந்தாளி.
அந்தோ - ஐயோ.
அபயம் - (பயமின்மை) அடைக்கலம்.
அரவு - பாம்பு.
அரற்றினன் - கூவினன்.
அரிது - முடியாது, கூடாது.
அருந்தி - உண்டு.
அல்லல் - துன்பம்.
அவண் - அங்கே.
அறிவிலார்பால் - மூடரிடத்தில்.
அனாதரம் - உபேக்ஷை, அசட்டை.
அறைந்து - சொல்லி
ஆகு - எலி.
ஆங்கு - அங்கே.
ஆவி - உயிர்.
இடர் - துன்பம்.
இடுக்கண் - துன்பம்.
இயல்பு - தன்மை.
இயற்றல் - செய்தல்.
இருநிதி - பெருஞ் செல்வம்.
இருவினை - நன்மை தீமைகள்.
இலவு - இலவமரம்.
இவண் - இங்கு.
இறந்தது - சென்றது.
இறுத்திடுதல் - கொல்லுதல்.
இறுமவர் - முடிபவர்.
இன்றுகாறும் - இன்று வரையில்.
இன்ன - இப்படிப்பட்ட.
ஈங்கு - இங்கே.
ஈது - இது.
ஈந்தனன் - கொடுத்தான்.
உழன்று - திரிந்து.
உழை - மான்.
ஊகம் - யோசனை.
ஊதியம் - பலன்.
எண்தரு - எண்ணமுள்ள.
எதிர்வது - இனிவருவது.
எந்தடைவேனும் - எந்த விதத்திலாயினும்.
எய்திடில் - அடைந்தால்.
எய்துவது - அடைவது.
எவனோ - எப்படியோ.
எள்ளல் - இகழ்தல்.
எறி திரை - வீசுகின்ற அலை.

என்வண - என்ன.
ஏகி - போய்.
ஏகின - போயின.
ஒறுத்து - கடிந்து, வெறுத்து.
ஒன்று சிந்தையர் - பொருந்திய மனமுடையவர்.
ஓங்குமாறு - விருத்தி யடையும் படி.
ஓலவே - வருத்தத்துடனே.
கடுவிசை - மிக்க வேகம்.
கணம் - க்ஷணம்.
கணை - அம்பு.
கதிரவன் - சூரியன்.
கபடம் - வஞ்சகம்.
கபோதம் - புறு.
கமட வேந்தன் - ஆமையரசன்
கரவுறு - மறைந்து கொள்ளும்.
கருக்கு முள் - கூரான முள்.
கருமம் - காரியம்.
கலை - மான்.
களிறு - ஆண் யானை.
கள் - தேன்.
கன்று - வருந்துகின்ற.
கா - சோலை.
காணிக்கை - தக்ஷிணை.
காவலன் - அரசன்.
கானவன் - வேடன்.
கான் - காடு.
குருளைப்பருவம் - கன்றுயிருந்த காலம்.
கூனல் - வளைவு.
கோடி - காகம்.
கோட்டு - மண் வெட்டி.
கோலைபயில - கோலைசெய்ய.
கோடு - கொம்பு, கிளை.
கோலம் - அழகு.
சதுர்விதார்த்தங்கள் - நாற்பொருள்: அறம், பொருள், இன்பம், வீடு என்பன.
சத்தி - வன்மை.
சத்துவம் - வன்மை.
சந்ததம் - எப்போதும்.
சமர்த்து-கெட்டிக்காரத்தனம்.
சாடலாம் - சொல்லலாம்.
சால - மிகவும்.
சாற்றினும் - சொன்னாலும்.
சாற்றுதல் - சொல்லுதல்.
சித்தி - முடிப்பது.
சின்னபின்னம் - உருவம் குலைதல், துண்டு துண்டாதல்.
சீலர் - நல்லொழுக்கமுள்ளவர்.
சுதி - சுருதி.
சுந்தரம் - அழகு.
சூழ்தல் - வளைத்தல்.
சூழ்ந்து - சுற்றி, வளைத்து.
செப்பல் - சொல்லுதல்.
செருக்குற்று - கர்வித்து.
செறி புனல் - நிறைந்த நீர்.
சேடன் - ஆதிசேஷன்.
தஞ்சம் - அடைக்கலம்.
தண்டம் - தண்டனை.
தத்துதல் - பாய்தல்.
தமர் - சுற்றம்.
தருக்கி - களித்து.
தளை - கட்டு.
தள்ளுதல் - நீக்குதல்.
தன்மம் - நீதி.
திங்கள் - மாதம்.

திண்ணம் - நிச்சயம்.
திரள் - குவியல்.
திரம் - ஸ்திரம், நிலை.
திரை - அலை.
தின்னிரை - தின் + இரை.
தீர - முற்றும்.
தீரம் - கரை.
துங்கம் - உயர்வு.
துறந்தவர் - நீங்கியவர்.
துன்னும் - நெருங்கும்.
தெரித்திடுதல் - தெரிவித்தல்.
தெள்ளிய - தெளிவான.
தேங்கு - நிலைத்த.
தேராய் - ஆராய்ந்து அறியாய்.
தொல்லை - முன்.
நஞ்ச அம்பு - விஷந்தீற்றிய அம்பு.
நவில் - சொல்.
நவ்வி - மான்.
நாடி - விரும்பி.
நாரியர் - பெண்கள்.
நாற்பொருள்-அறம், பொருள், இன்பம், வீடு.
நிகழ்ந்தது - நடந்தது.
நிதி - செல்வம்.
நிதியம் - செல்வம்.
நீவிர் - நீங்கள்.
நுடங்கும் - துவண்டு போகும்.
நும் - உம்முடைய.
நேயம் - அன்பு.
நைந்த - வருந்திய.
நோக்கி - பார்த்து.
பகர்ந்து - சொல்லி.
பதி - கணவன்.
பத்து - சோறு.
பந்தமிட்டு - கட்டி.
பரவி - புகழ்ந்து.
பரவிய - தொழுத.
பரவை - கடல்.
பரிவாரம் - சூழ்ந்திருப்போர்.
பலி - உணவு.
பன்னிய - நெருங்கிய.
பாங்கு - பக்கம்.
பாசம் - தளை.
பாடை - பாஷை.
பாம்பு - ராகு கேதுக்கள்.
பாரளை - (பார் + அளை) பூமியிலுள்ள வளை.
பிஞ்ஞகன் - தலைக்கோலத்தை யுடையவன்.
பிறிது - வேறு.
பீடு - பெருமை.
பீதி - பயம்.
புக்கால் - புகுந்தால்.
புடவி - பூமி.
புணரி - கடல்.
புணர் - பொருந்திய.
புந்தி கூர் - புத்தி மிகுந்த.
புரை - ஒத்த.
புரை - குற்றம்.
புரைவற - குற்றமற.
புலவர் - அறிஞர்.
புல்லி - அணைத்து.
புல்லியர் - அற்பர்.
புல்லுதல் - பொருந்துதல்.
புள் - பக்ஷி.
புறவின் வேந்து - புறா அரசு.
பூண்ட - அடைந்த.

பெய்து - இட்டு.
பைங்குழை - பசுமையான தளிர்.
பைத்த - பசுமையான.
போடுக்கென - விரைவாக.
போதும்பர் - சோலை.
போய்கை - குளம்.
போருவில் - ஒப்பில்லாத.
போள்ளென - விரைவில்.
போகி - போய்.
போதம் - அறிவு.
போதும் - போவோம்.
போந்திடுதல் - வருதல்.
மதி - புத்தி.
மந்திர விசாரம் - வேதத்தை ஆராய்தல்.
மறி - மான்.
மன்னிய - நிலைபெத்த.
மாந்தர் - மனிதர்.
மானம் - பெருமை.
மிக்கோர் - மேலோர்.
மிசை - மேல்.
முட்டது - முட்டுப்பாடுடையது.
முயங்கிடுதல் - தழுவுதல்.
முறைமை - விதம்.
மூடிகம் - எலி.
மெத்தும் - மென்மையான.
மேவும் - தங்கும்.
மோகம் - விருப்பம்.
யாசித்தல் - இரத்தல்.
வகுக்கும் - சொல்லும்.
வரிசை - ஒழுங்கு.
வரையற - அளவின்றி.
வல்வினை - கொடிய வினை.
வள்ளல் - அளவின்றிக்கொடுப்போன், பெருங் கொடையாளி.
வறுமை - தரித்திரம்
வாமம் - அழகு.
வாயசம் - காகம்.
வாயச வேந்தன் - காக ராஜன்.
வாவி - குளம்.
வானுறுசுடர்கள் - வானத்தில் உள்ள ஒளிகள்—சூரிய சந்திரர்.
விசும்பு - ஆகாயம்.
விடாய்த்து - களைத்து.
விரகு - உபாயம், புத்தி.
விரத்தன் - (உலகை) வெறுத்தவன்.
விருத்தர் - கிழவர்.
விலக்காமல் - நீக்காமல்.
விளித்தல் - அழைத்தல்.
வினவ - கேட்க.
வீந்த - செத்த.
வெஞ்சமன் - கொடிய எமன்.
வெய்ய - கொடிய.
வென்றி - ஜயங்கொண்ட.
வேதியன் - பார்ப்பான்.
வைகறை - விடியற்காலம்.
வைகுதல் - தங்குதல்.

